## பிரபஞ்சந் தன்மயபாவனையாலுங்காண்பான் காட்சிநீங்குமெனல்.

நிகழ்கின்றகாண்பானுங் காட்சிதானு நிதானமதாந்துரியம தேயன்றிவேருய்ப். புகழ்கின்றவாபரணஞ்சுவர்ணம்விட்டும் பொருகின்றவலைதிவலை சலதிவிட்டுந், திகழாதஞாயமெனவி லாததாலே திகழ்முத்துராமையன்றிவ்யவாக்காற், புகழானத ன்மயத்திற் காண்பான்காட்சி பொருளாகவிலதாகி நீங்குமெ ன்ருன். (௧௧)

## எல்லாமறியப்பட்டதன்னை யொன்ருலு மறியப்படாதாகக்காண்கின்றதே பிரத்தியக்க ஞானமெனல்.

நீங்குகின்றசரீரமுதன்மாயையீருய் நிகழ்தத்வமுப்பதைந்து ந்தானேகண்டு, பாங்காகநீங்குதலாலதனையெல்லாம் பரமாக வறிகின்றதன்னையொன்று, மீங்கெதுவுங்காண்குதெனச் சுரு தியுத்தி யிலதாகித்தான்சுகமாய்விளங்கலாலே, யாங்கெதுங் காண்கின்றதனையொன்றுங்காணு தாய்க்காணல்பிரத்தியக்க ஞானமென்ருர். (௧௨)

## தன்னிடத்தி லகங்காரம் பிராந்திமூலப் பிரமையெனல்.

ஞானமதாய்விகாரமிலா தென்றுமுள்ள நல்வடிவாமகண் டேகசொருபந்தன்னி, லீனமதாமகங்காரம்பிராந்தியாலே யி ருப்பதுபோற்ருேன்றுவதே யன்றியில்லை, மோனமதாமனுப வத்திலகங்காராதி முற்றுமிறந்தகிட்டானம்விளங்கலாலே,மா னமுருத்தன்னிடத்தி லகங்காரந்தான் மயக்கமதேகாரணமா ய்வருவதென்ருர். (௧௩)

## இங்கையுமங்கையு மிராகத்துவேடமன் றியிலிருந்தா லிரண்டுக்கு மயிக்கியமெனல்.

வருகின்றராகத்துவேடநீக்கின் வானம்போற்பேதமிலாத பேதமாக, மருவுவதாலிங்கிதெனுமங்கிதென்னு மாசின்றியயி க்கியமேமருவலாகு, மருமையதாய்ச்சிகித்துவசன்றன்னைத்தே வ ரழைக்கும்போதபேதமதாயருள்வதாலே, யுரிமையுடனிங் கங்குமிராகத்துவேட மொழிவதுவெயயிக்யமென வுரைத்தா னையன். (௧௩)

## பிரத்திட்சவிடயமு மப்பிரதிட்சவிடயமுந் திருக்குவாகிய ஞானத்திற்குத் திரிசயமெனல்.

ஐயமுதற்றடைநீங்கிற்றன்சொரூப மறிவாகியெவ்விடத்து மமர்வதாலே, மையானவண்டபகிரண்டமெல்லா மருவுகின்ற தனக்கெதுவுந்திரிசியமாகுந், தொய்தமதாஞேயமறிந் தறியா தாகத் தோன்றுவஃதுமனமாதிக்காவதாலே, யையனுமேயறிந் தறியாவிடயந்தானு மறிவதனிற்றிரிசயமாய்த் தோன்றுமெ ன்றார். (௧௫)

## வஸ்துநிண்ணயத்திற் பிரபஞ்சந் தானல்லவெனல்.

தோன்றுதலாமகமிதமாஞ்சிருட்டிமுன்பு தோன்றாதுசுசா திகமாதியின்றிச், சான்றானசத்தியசிற்சுகமாம்வஸ்துத் தான் மாத்திரம்விளங்குதலாற்சகசிவாதி, மான்றல்வடிவாதலினாற்றி ரிகாலத்து மருவாதுவஸ்தொன்றேமருவலாலே, யான்றவஸ் துநிருணயத்திற்பிரபஞ்சந்தா னலவென்றுமையனுமேயாரொ ன்றாரே. (௧௬)

## அத்துவிதத்திற் றன்னைத்தவிர வேறல்லாதபடியினுற் றுனேயெனல்.

பார்க்கரியதன்மயமாந்திஷ்டிதன்னிற் பரசிவசகங்களென வறிவில்வேருய்த், திர்க்கமதாயிலாதுபடநூலைப்போலுந் திக ழ்கடமண்ணதுபோலுந்திகழ்தலாலே, யார்க்குமுயர்வானமு த்துராமலிங்க வையனெனக்கழருள்ளதிஷ்டியான, மார்க்கம தாமத்துவிதந் தனில்வேருக மருவாதுசகந்தானுய் மருவுமெ ன்ருர். (கஎ)

## சோகத்தால்வருந் துன்பமோகத்தாற் சுகம்போற்காட்டுமெனல்.

என்றுமேசோகமதாஞ்சமுசாரத்தி னெண்ணரியதுன்பமெ லாமோகத்தாலே, நன்றிதெனப்பன்றியுமே யமேத்தியத்தில் ரமிப்பதுபோல்ரமிக்கின்றமூடர்க்கென்றுந், துன்றரிதுஞான மெனவிவேகியானேன் ருடர்பானசமுசாரந்தொலைத்தற்கா கக், கன்றுவதாஞ்சோகமடைதலினுற்றுன்பங் கனமானமோ கத்தாற்சுகம்பாரென்ருர். (கஅ)

## இத்தனையுமாயாமயமல்லோ வுள்ளபடிமுடியுமெனல்.

பார்க்கின்றசகத்தெல்லாம்பொதுவேயாகப் பாணியமித்தி ருக்கவதிலறிவிலோர்கண், மூர்க்கமதாய்க்கிட்டாதைவேண்டு மென்று முயலுதலாற்றுன்பமதேயடைவர்ஞானி, தீர்க்கமுட னித்தனையுமாயையாலே திடமாகவுளதுவருமென்னல்கொ ண்டு, மார்க்கமதாயித்தனையுமாயையாக மருவுதலாலுளதுவரு ங்காண்பாயென்ருர். (கக)

## திரிசயந்திருக்கைவிட்டுத் தோன்றுமெனல்.

காண்கின்றவுருநாமஞ்சத்துச்சித்துக் கனமானவானந்தமை ந்துஞ்சேர்ந்து, மாண்பாகத்திரிசயமாய்த்தோன்றினு மயனு மருபஞ்சத்தாதிவிட்டு, வேண்பாகயிலாமையினாற் பிரமனாதி யெல்லாமுந்திருக்கைவிடத்தோன்றுதாலே, பூண்கின்றதிரிச யமுந்திருக்கைவிட்டுப் பொருந்துவதேயில்லையெனப்புகன்று னன்றே. (உ0)

## அதிட்டானத்தைத்தவிர வாரோபத்துக்கு வடிவமில்லாதபடியா லெல்லா மதிட்டானமயந்தானெனல்.

ஆனதனில்விளங்குகின்றசரீரமாதி யறிவதனில்விவர்த்தம தாய்த்தோன்றலாலே, வானதனிற்கந்தருவநகரம்போலும் வ ளர்கானனீர்போலுமருவப்பட்ட, தானசகந்தன்மயமாமிவ்வ டிதன்னி லயலாகாதறிவுமயமாதலாலே, ஞானமதாமதிட்டா னமன்றியொன்று நனுகாதிங்கதிட்டானமெல்லாமென்றார்.

## இந்திரசாலக்காரனிடத்திற் கந்தருவநகரந்தோன்றி யில்லாதழிதல்போற் றன்னிடத்திலுண்டான சங்கற்பமெவளவோவந்து மொன்று நிற்கவில்லையெனல்.

எல்லாமாம்வஸ்துவினிற்சிருட்டியான வீசன்முதற்றிரணம் வரையொன்றும்வேறாய், நில்லாமற்சொற்பனத்தில்வந்ததெல் லா நிகழ்புருடனொழியவொன்றுமிலாததேபோற், பொல்லாத சங்கற்பமயமாய்த்தோன்றிப் பொன்றினதோரளவில்லையாத லாலே, சொல்லானகந்தருவநகர்போற்றன்னிற் றோன்றினச ங்கற்பங்களில்லையென்றார். (உஉ)

## உபசாந்தமானதும் தன்மயமானதுஞ் சகலத்தியாகந்தானெனல்.

இல்லையெனப்புந்தியினிற்சகத்தைநீக்கி யெள்ளளவுமாசையுறுமிராசைபெற்றுச், சொல்பிரமாப்பியாசமதுசெய்யச்செய்யத் தோன்றுவதாமுபசாந்தமாதலாலும், புல்லரியதன்மயத்திற்றனக்குவேறாய்ப் பொருந்துபொருளொன்றுமிலையாதலாலு, மெல்லையிலாவுபசாந்தந்தன்மயங்க ளிருவகையுஞ்சகலம்விட்டதாகுமென்றார். (௨௩)

## நிவிர்த்தியாயிருக்கவேண்டுமல்லது நாமரூபநாட்டம்வந்தா லத்துவிதமாய்ப் பார்க்கவேண்டுமெனல்.

ஆகின்றநிவிர்த்தியதின்பெருமைசொல்ல வாராதுமுடியும தோவாசிட்டத்திற், போகின்றபணிமதியும் பதுமத்தோனும் பொற்றிரள்சேரிந்திரனுஞ்சரியோவென்று, யூகமுடனறைவதனுலியாதுநீக்கி யொப்பிலதாநிவிர்த்தியுடனிருக்கவப்போ, பாகமதாநாமமுடனுருவந்தோன்றிற் பரமாத்துவிதம்பார்சந்ததமென்றாரே. (௨௪)

## தன்னைச் சிவபாவனையாகக்காண்கின்றதே பிறவியெனல்.

சந்ததமுமகண்டமதாந்தன்னைத்தானே சலிக்கின்றகர்த்தாவாய்ப்போர்த்தாவாகச், சிந்தனைசெய்ததனாலேநாரிமைந்தன் செல்வமிகவேண்டுமென வலைந்தலைந்து, நொந்ததனாற்றன்வடிவை மறந்தனேக நோக்கரியபிறப்பிறப்புவருதலாலே, தந்தைமுத்துராமர்திருவாக்கினாலே தனைச்சிவனெனவறிதல்பிறவியென்றார். (௨௫)

## தன்னைச் சிவரூபமாகக்காண்கின்றதே மோட்சமெனல்.

என்றுமேநிரந்தரமாய்நேசத்தோடு மேகாந்தமாயிருந்துயா ளுறென்று, குன்றாதவடியருடன்விசாரஞ்செய்து குறைவில் லாமனனமுடன்றியானஞ்செய்தாற், பொன்றாதசுசாதிகமாதி யின்றிப் பொருளானசிவமாத்ரம்விளங்கலாலே, யொன்றுன தனைச்சிவமாய்க் காண்கைதானே யொப்பரியமோட்சமென வுரைசெய்தாரே. (உ௬)

## சகலகலைக்ஞானவல்லவர்க்கு நிராசைவேண்டுமெனல்.

செய்யவொணுவேதமுடனுகமங்கள் சிறப்பானபுராணுதிய ர்த்தமியாவுங், கையிலாமலகமெனப்பார்த்துந்தன்னைக் காணு துமதவசமாய்க்காமமாதி, மைவடிவாய்நின்றவர்வேசரியேயெ ன்று மகத்தானவசிட்டர்மிகவறைதலாலே, யையனுமேசகல கலைவல்லரேனு மழகுள்ளநிராசைதனையடையச்சொன்னுர்.()

## எல்லாஞ் சிவன்செயலெனல்.

சொன்னதொருசிருட்டிதிதிசம்மாரங்கள் சுயஞ்சோதிவடி வானசிவத்தாலன்றி, யுன்னவொருகடுகுமுதன் முன்பினிப் போ தொருவருமேசெய்ததெனக்கண்டதில்லை, யன்னவகை பெரியோர்களவனையன்றி யணுவேனுமசையாதென்றருள்வ தாலே, பின்னமதாமெச்செயலுஞ்சிவனுலென்று பேசியெ னையிரட்சித்தான்பிரமமாக. (உ௮)

## எல்லாஞ் சிவாகாரமெனல்.

ஆகமெலாம்பரமசிவம்பூன்றமாக வமர்வதனுலதன்மயமாஞ் சகசிவாதி, மாகமதிற்ருேன்றுகின்றதலநீலங்கண் மாகமதேயா வதுபோன்மனதினுலே, பாகமுறுஞ்சகங்களெலா மோர்ந்து

பார்க்கிற் பரமசிவசொருபமதாயிருப்பதாலே, யேகமதாமுத் துராமேசன்முன்ன மெல்லாமுஞ்சிவாகாரஞ்சித்தமென்முன்.

சிற்றறிவிலேதானுயர்வுதாழ்வான
தாரதன்மியம் பேரறிவு சமசாட்சியாமெனல்.

சித்தமதுபிரமையுற்றேன்றனக்கொன்றேனுந் திரமாகவில துபலவிதமாய்க்காணு, மத்தகமைசிற்றறிவி லுயர்வுதாழ்வென் றனேகவிததாரதன்மியமதனுற்பெந்த, மித்தனையுமிலாதுபேர றிவேயாளு லெப்போதுஞ்சமசாட்சியிதுவேமுத்தி, பெத்தம தாஞ்சிற்றறிவி லுயர்வுதாழ்வாம் பேரறிவு சமசாட்சிபாராயெ ன்ருர். (கூ0)

உபசாந்தத்திற் சச்சிதானந்தமூன்று
மனுபவமாய்க்காணவேண்டுமெனல்.

பார்க்கின்றமனதை யகமுகமேயாக்கிப் பாழானவாசனைக ளொன்றுமின்றி, மார்க்கமுடன்றத்துவத்தையுணரும்போது மகிழ்சுகமுஞ்சித்ததுவுமிருப்புந்தோன்று, மீர்க்கின்றசகம்பஞ் சகோசமொன்று மிலாதுபரசிற்சுகமேயிருப்பதாலே, தீர்க்க முடனுபசாந்தந்தோன்றும்போது திடமாகச்சத்துடன்சிற்சுக ங்காணென்ருர். (கூக)

பிரபஞ்சபேதமெல்லாஞ் சிற்றறிவிலென்று
காணவேண்டுமெனல்.

காணரியவகண்டபரிபூன்றவஸ்திற் கற்பிதமாஞ்சீவபரசகங் கடன்னிற், பேணலுடனுன்பெரியன் சிறியனென்றும் பெரி தென்றுஞ்சிறிதென்றும்பெண்ணீதென்றும், வீணதுவாஞ்சி ற்றறிவிற்கற்பிப்பார்கள் விவேகமதிற்பேதமதே யிலாமையா லே, மாணவிலாப்பிரபஞ்சபேதமெல்லா மயக்கமதாஞ்சிற்ற றிவிற்காட்டுமேன்ருர். (கூஉ)

ஈதனைத்துஞ்சொரூபமே யானெத்தைதயிச்சிப்பே
னெதையிகழ்வேனென்றிருக்கின்றதே
பற்றின்மையாமெனல்.

காட்டுகின்றசகப்பிரமை நல்லதென்று கருதிவிடயாசையி னிற்கலங்கிநாளுந், தேட்டமுடன்வெறும்பிணத்திற் கழுகு போலத் தியங்கியுமேநரகத்திற்காளாகாம, வீட்டமதாஞ்சகங் கள்பரசொரூபமென்றே யிச்சைதுவேஷம்விடல்பற்றின்மை ஞான, நாட்டமதாலீதனைத்துஞ்சொரூபமென்றே நகையொ ழிதல்பற்றின்மைகூடுமென்றார். (௩௩)

தேகோகத்தினாலே யருந்தலதனாலே
பொருந்தலிதனாலே
சகலவாசையும்வந்ததெனல்.

கூடாதசரீரத்திற் புந்திவைத்துக் குணமானவருந்தலுடன் பொருந்தல்வேண்டி, மூடாள்போற்றீனியிலு மியோனிதன் னின் முயங்குவதுவேசரியுமுறுவதாலே, நாடாமலிவ்விரண் டுந்தன்னைநாடி நானசங்கன்சின்மாத்ரனென்றன்மோட்ச, வீ டதனாற்றேகோக மருந்தல்கூடன் மேவிதனாலாசைவருந் தா னேயென்றார். (௩௪)

நிருவிகற்பசமாதியி லென்னதோற்றம்வந்தாலுந்
தன்னைத் திருக்காகவேகாணவேண்டுமெனல்.

தானானநிருவிகற்பசமாதிதன்னிற் றடையானபிரகாசமிரு ட்டுமோக, மானதபேதங்கள்வருகிற்றன்னை யறிவாகக்கண்ட தனையகற்றல்வேண்டு, மூனானபேதமதைவஸ்துவென்றே யு ழலாதுதான்றிருக்கா யுற்றுநிற்றன், ஞானமதாற்சமாதியினி லென்னதோற்ற நணுகினுமேதனைத்திருக்காய்க்காண்பாயெ ன்றார். (௩௫)

பிரபஞ்சத்தில்வருஞ்சுகம் பின்னாலேவெறுப்பாகுஞ் சொரூபத்தில்வருஞ்சுக மெத்தனைநாளிருந்தாலும் பிரியம்வாங்காதெனல்.

பாய்கின்றமனமதுதான்விடயந்தன்னிற் பற்றும்போதின்ப ம்பின்பலவாந்துன்ப, மொய்விலதால்வெறுப்புவருமிதுபோற் றன்னி லொருசணிகமுறுமாகிலொருகாலும்பின், னேயமதாந் தற்சுகத்துவெறுப்பிலாது நெடுநாளும்பெரியோர்களிருப்பதா லே, ஞேயசுகம்பின்வெறுப்பாந்தற்சுகந்தா னேரிலொருகாற் பிரியநீங்காவென்றார். (௩௬)

இக்கவியேவாக்கியம்.

ஆரானசலதியின்முன்னலைநீங்கிப்பின் னலைவருமுன்சலதி யதேயமர்தல்போல, வேரானதன்னிடத்தின்முன்புவந்த வி விதமதாங்கடபடசங்கற்பநீங்கி, நேரானபின்னினைவுவருவத ன்மு னித்தியமாந்தான்மாத்ரமிருப்பதாலே, பாராதிசகமசத் துத்தானேசித்துப் பரமானதன்னிலையாம்பாக்கியமென்றார். (௩௭)

இக்கவியேவாக்கியம்.

பாக்கியமாம்பூமியிலோஷதிகளெல்லாம் பார்மயமும்பொய் யெனவுமாகுமாபோற், சாக்கியதாஞ்சிதாகாசந்தனக்குமேலா ய்ச் சார்வதுவேறிலாமையினாற்புமாணிழற்போ, லாக்கியவிச்ச கத்தெல்லாமித்தையென்று மழகுள்ளதன்மயங்களாகுமென் றும், பாக்கியமாமிவ்வசனமடியருய்யப் பகர்ந்தருளினான்கழ னிப்பதியிலாசான். (௩௮)

வகையைக்கண்டு மயங்காதே தொகையைக்கண்டு சும்மாவிருவெனல்.

ஆசானபிரபஞ்சவகையின்மூழ்கியாயிரங்காலதனியமம்விசா ரித்தாலு, மாசாகப்புந்திமயங்குவதேயல்லான் மகத்தானசொ

ருபசுகம்வருவதில்லை, யாசானையடைந்துபரவிசாரத்தாலே யா ரோபசகமாதி யறிவாய்ப்பார்த்தன், மாசிலதாமுத்தியதால்வ கையைக்கண்டு மயங்காதேதொகைகண்டுமகிழ்ந்னென்றார்.

## சாதுசங்கமே சகலசன்மார்க்கத்துக்கு மேதுவெனல்.

நன்மையுடன்கங்கை யுற்றேன்பாவம்வெப்ப நலமிலமுக் காதிதனைநீக்கலேபோற், றன்மையுளசாதுசங்கந்தனையடைந் தோன் சனனமுடனஞ்ஞானஞ்சகலதுன்ப, வன்மையெலாநீ க்கியமார்க்கத்தைவிட்டு வரமானதனையடையச்செய்வதாலே, சன்மார்க்கந்தனையடையச்சாதுசங்கந் தானேதுவேறுசகாவா காதென்றார். (சO)

## உபசாந்தத்திற்காண்பான் காட்சியில்லையெனல்.

ஆகின்றகதலியதன்மட்டையெல்லா மழகாகநீக்கினவன்க ண்மிச்சம்போ, லேகின்றசரீரமுதற்கோசமெல்லா மிலதென் றுசோதித்ததன்னைவிட்டுப், போகின்றகாண்பான்காட்சிகடா ன்வேறு பொருந்தாதேயுபசாந்தமாதலாலே, யாகின்றவுபசா ந்தமதனிற்காண்பா னற்பமதாங்காட்சிகளுமில்லையென்றார்.()

## மேளனவுசமானமான துரியத்திற் சருவதுக்கநிவிர்த்தியெனல்.

இல்லாதுகோபமுறவாசைநீக்கி யேகவறிவுருவானசிவமே யாவுஞ், சொல்லானசகம்வேறாயில்லையென்னுஞ் சூனியனு ய்நின்றநிலைதுரியமாகு, நல்லோர்களிப்படியேசகத்தைநீக்கி ந லத்துடன்மேளனவதுபோனனுகலாலே, சொல்லரியமேள னவுசமானமான துரியமதிற்சருவதுக்கநிவிர்த்திசொன்னார். ()

உற்றவாறேதுவருமது வருகவெனல்.

சொன்னதோராணுதிரணம்வேறிலாத சுத்தபரிபூரணமாந்த னக்குவேருய், நன்னயமாய்வாராதபொருளும்வேண்டா நல த்தோடுவருகின்றபொருளும்வேண்டா, மென்னென்னபிரார த்வவழியாய்வந்ததெல்லா மூந்தன்னைவிடவிலாமையாலே, யு ன்னுதிங்குற்றவாறெதுவந்தாலு முழலாதுவருகவெனவுறுவா யென்ருர். (சங)

எல்லாங்கதைதானெனல்.

என்றுமேபிரபஞ்சந்தொடர்பாகத்தா னெழுந்துவளர்ந்தழி கின்றவியல்புபார்க்கி, னன்ருனமூலத்தாதிகதையேபோலு ந லமானகாதிமுனிகளைவைப்போலும், பொன்ருதசுத்தபரபுத்த மான பூரணமாந்தனிலெவையும் பொய்யானதாற், குன்ரு தசீவபரசகங்களெல்லாங் குறைவிலாக்கதையான கோலமெ ன்ருர். (சச)

எல்லாம்புலப்பந்தானெனல்.

கோலமதாஞ்சாதிகுலவருணமாதி கோத்ரமுதலாச்சிரமமா சாரங்கள், காலமுதற்றேசநியமங்கள்பின்னுங் கனமானவிக லோகபரலோகங்கள், சாலமதாயதையடையுந் தொழில்களி யாவுஞ் சத்தியசிற்சொருபத்திலாரோபத்தான், மூலமிலாவி வையெல்லாம்புலப்பமென்றே மொழிந்ததனிற்சந்தேகமனு வுமுண்டோ. (சரு)

பிறர்குற்றத்தைத்தனதாயெண்ணிக்கொண்டு
தன்குற்றத்தை விசாரிக்கவேண்டுமெனல்.

உண்டானவிராகாதிநீக்கித்தன்னை யுறவேண்டுமென்றனு முயர்ச்சிசெய்வோன், கண்டபலவுயிர்களெல்லாந்தன்னைவிட் டுக் காணுதாலவர்குற்றந்தனதாய்க்கண்டு, தொண்டானதன்

குற்றம்பார்த்துநீக்கிற் சுகமதனையடைந்திடுவனாதலாலே, மண்டலமார்பலர்குற்றந்தானுய்க்கண்டு மருவியதன்குற்றமதையொழிவாயென்றார். (சசா)

சிற்றறிவாகியசீவவறிவே
யெல்லாத்திற்குமூலமெனல்.

வாய்த்ததுவாஞ்சுழுத்திதனிலகண்டமாக மருவுகின்றதன்னிடத்திலியாதுமில்லைப், பேய்த்தோராஞ்சிற்றறிவிற்சுகதுக்கங்கள் பெரியவனுஞ்சிறியவனுன்பிறந்திறந்தேன், சேய்த்ததுவாநரகசொற்க முதலாய்த்தோன்றுஞ் சிற்றறிவைவிடிற்சிவமேயாவதாலே, மாய்த்திடுசிற்றறிவாஞ்சீவறிவுதானே மற்றெதுக்குமூலமதாம்பாங்காயென்றார். (சஎ)

மனதுமுதலாகியபிரபஞ்சவியல்புகளு
மேகாடம்பரந்தானெனல்.

பாங்கானவாகாயந்தன்னின்மேகம் பலவுகளுஞ்சத்தமுடன்கூடிநீங்கு, மாங்கதுபோற்சிதாகாசமானதன்னி னலேகின்ற மனமாதியுயர்ந்துந்தாழ்ந்தும், தாங்கலுடன்றிரிவதெலாங்கனவேயாகுந் தானசங்கனெப்போதுமாதலாலே, யீங்கானமனதுமுதற்பிரபஞ்சத்தி னியல்புகளுமேக நடமெனவுன்னென்றார். (சஅ)

ஞானநாட்டத்திற்சிரத்தையும்
பிரபஞ்சநாட்டத்தி லசிரத்தையும்
வேண்டுமெனல்.

உன்னவொணாவான்மாவோ மனவாக்காலே யுறவரிதாலதையறியவிரும்பினேனு, மன்னவொணாநிராசையுற்றுக்கரணமூன்று மருவியொத்தேயகமுகமாயனேககாலம், பின்னமிலா

ச்சுருதிகுருவனுபவத்தாற் பின்வாங்காதனுட்டிக்கிற்றெய்வா தின, நன்மைவரிற்கிட்டுவதான்ஞானநாட்ட நயந்துசகநாட் டம்விடன்முக்யமென்முர். (சகூ)

தத்துவாதத்துவவிசாரம்பண்ணியதத்துவந்தள்ளித்
தத்துவத்தைத் தானய்க்கண்டு சந்தேகாதியின்றி
யிருக்கவேண்டுமெனல்.

முக்கியமாமோட்சமதைவிரும்பினேனு முதன்மையதாஞ் சற்குருவைப்பெற்றன்னேனற், றக்கதிதுதகாததிதுவென்றறி ந்து சந்தேகமாதியின்றித்தன்னைக்காணல், பக்குவமாமோட்ச மதாற்றத்வாதத்வப் பரமானவிசாரமதாலதத்வந்தள்ளி, முக்கி யமாந்தத்துவத்தைத்தானய்க்கண்டு மூன்றுவிததடைநீங்கியி ருப்பாயென்முர். (ருo)

நாமரூபமாய் நாடுவதைத்தள்ளிச்
சொரூபமாகநாடுகிறதே சமநிலையாமெனல்.

இருக்கின்றதனைமறந்துநாமரூப மெப்போதுநாடியதாலள விறுன்பம், பெருக்காகவருமதனலவையைநீங்கிப் பெரிதுக்கு ம்பெரிதாகியதூலமாகித், திருக்காகிநிதானமதாந்தன்னைநாட ல் சிவமானசமநிலையாமாதலாலே, தருக்குமிகுநாமாதிநாட்ட ம்விட்டுத் தனைநாடல்சமநிலையதானதென்முர். (ருக)

சனனமரணமு நினைவுமாத்திரமெனல்.

தானிருவிகாரியதாயிருக்கச்சீவர் தனையறியாததினுலேபிற ப்பிறப்பு, ஆனனசரீரமதுபெருத்தலோங்க ஓயர்வுதாழ்வதனு லேயனேகதுன்பம், பான்மையுடனென்றந்தை தாய்பெண் ணென்று பாவனையாலப்படியேயாவதாலே, மேன்மையதாய் ப்பிறப்பிறப்புநினைவேயென்று மெஞ்ஞானதேசிகன்முன்வெ ளிசெய்தானல். (ருஉ)

குருவாக்கியத்திற் சந்தேகாதியின்றி
யிருத்தன்மெய்ப்புருடவருத்தமெனல்.

செய்யவொணுவேதாதிகுருவையன்றிச் சிவஞானமடைந்தரெனச்செப்பாதாலே,யையமறச்சற்குருவால் வாக்யம்பெற்றேயவருரைத்தபடியாக வனேககால, மெய்யதுவாயப்பியாசஞ்செய்தாற்றன்னை விபுவாகவறியவருமாதலாலே, யையகுருவாக்கியத்திற்சந்தேகாதி யறவிருத்தன்மெய்ப்புருட வருத்தமென்றார். (ருங)

தன்சுபாவநிலையினினைவுக்கு நித்தியத்துவ
மில்லாததினலே பிரபஞ்சமித்தைதானெனல்.

வருகின்றசலனங்களின்றிநின்ற வஸ்துவதாய்விபுவாகிமனவாக்கெட்டா, வருவுருவாயமிர்தமதாயநூலமாகி யகோசரமாயனுமயமாயமர்ந்ததன்னின், வருநினைவுநிலைகாணு மதனுல்வந்த வானுதிசகம்பொய்யேயானதாலே, சொரூபநிலைதனினினைவுநில்லாதாலே சொல்சகங்கண்மித்தையெனச் சொன்னுனையன். (ருச)

அதிட்டானக் ஞானநிலைமையுள்ளவர்களுக்கு
யெல்லாமாகிய வத்துவிதஞானமும்வருமெனல்.

சொன்னதோரயங்கண்டோன்றனக்குவேருய்த் தோன்றுதாயுதங்களயமயமாம்போலத், தன்னதுவாஞ்சொரூபத்தையறிந்தோனுக்குத் தன்னைவிடச்சகந்தோன்று தானுய்த்தோன்று, மின்னவகையிருப்பதனுற் சொருபஞான வியனிலையுள்ளோன்றனக்கெல்லாமுமாகி, மன்னுகின்றவத்துவிதஞானமுண்டா மகத்தானவிவேகமதாற்பாராயென்றார். (ருரு)

பற்றின்மையாகிய துரியநிலையுள்ளவர்க்குப் போனகாரியம்வருகிறகாரியத்தினினைவில்லாதிருந்தாற் சாட்சாத்காரமாமெனல்.

பார்க்கின்றசீவசக விசாரஞ்செய்து பரமானதுரியமதை யடைந்தானாகின், மார்க்கமதாய்ப்போதலுடன்வருதறன்னின் மகிழ்வுகுறைவடைவதுவேயிலாததாலே, கார்க்கின்றநிராசையதாந்துரியம்பெற்றோன் கனமாகமுன்போனதொழில்களோடு, யீர்க்கின்றவருதொழிலாநினைவுதோன்றா திருந்திடல்சாட்சாத்காரமென்றுசொன்னார். (௫௬)

தான்சித்துருபனென்கின்ற புத்திவாங்காதிருக்கி றானீயென்கின்ற பேதமான வஞ்ஞானநீக்கம் வருமெனல்.

என்றுமேயஞ்ஞான நீக்கஞ்செய்வோ னிருந்தாலுநின்றாலுந்துயில்செய்தாலு, நன்றுறவேநடந்தாலும் புசித்தாலுந்தானான்சித்துருபனெனன்மறவாதாகி, நின்றிடவேவேண்டியநாற்றானெப்போது நிகழ்கின்றசித்துருவனென்றபுத்தி, யொன்றினுமேவாங்காமலிருக்கிறானீ யொன்றுவதாமஞ்ஞான நீங்குமென்றார். (௫௭)

வருகாலச்செய்கை பின்பின்பதுன்பமறிந்து செய்யவேண்டுமெனல்.

நீங்காதோர்காரியத்தைமுயர்ச்சிசெய்வோ னிகழுதலுற்க ஆக்கமறிந்துகொண்டு, பாங்காகச்செயவேண்டு மானதாலும் பரமானவசிட்டருமேல்வினைநோக்காதார், இங்கிதனையடைந் திடுவதொன்பதாலுஞ் சிவரூபமானகுருநாதன்றானு, மீங்காரு மெதிர்காலச்செய்கைபின்பிங் கின்பதுன்பமறிந்துசெய வேண்டுமென்றான். (௫௮)

## இக்கவியேவாக்கியம்.

வேணுவதனக்கினியிற்பொறிகடானும் வெகுவாகக்கிளம் பினுமக்கனறனக்குக்,காணவொருலயமில்லாததுபோற்பூர்ண கனமானதன்னிடத்திற்றேகமாதி, பேணவுடன்வாழ்ந்தேயுந் தாழ்ந்ததாயும் பெலமாகவெந்நினைவு தோன்றினாலும், வீண துவாங்கற்பிதந்தானித்தியமென்று விபுவானசற்குருவும்விளம் பினரோ. (ருகூ)

## எல்லாமானதாகத் தன்னைக்கண்டா வீதலுமிரக்கமும்வரு மிராகத்துவேடம் வாராதெனல்.

விளங்குகின்றபிரமாணுதீதமாகி விபுவாகியசலமதாயகேய னாகித், துளங்கலிலாநிரஞ்சனமாந்தானெல்லாமாய்த் தோன் றினுவிராகமுடன்றுவேஷமின்றி, வளம்பெறுநல்லீவிரக்கம் வருவதாலே வருகின்றசகலமுமாய்த்தன்னைக்காணிற், களங் கமிலாதீதலுடனிரக்கந்தோன்றுங் கனமானவிராகாதிதோன் றாதென்றார். (சு0)

## இக்கவியேவாக்கியம்.

தோன்றுகின்றதன்னிடத்திற்பெருமையோடுந் துவள்கின் றசிறுமைபகையுறவுமேலு, மூன்றுவதாஞ்சுகதுக்க மாதியாவு முறுகின்றசங்கற்பமயமதாலே, யான்றலிலாவாரோபமத்தியா ச மாகின்றகற்பிதமாய்க்காண்பாயென்றே, யென்றலிலாக்கழ ணியின்கண் ணெழுந்தமுத்து ராமலிங்கதேசிகரு மிசைத்தா ரன்றே. (சுக)

## சரீராதிப்பிரபஞ்சங்காலத்துட்பட்டபடியா லதனால்வரு முயர்வுதாழ்வு வருத்தங்களுக் களவில்லையெனல்.

இசைகின்றகாலங்கட் கதீதமான வின்புருவாம்பரமாத்மா வொன்றுமாத்ர, மசைவின்றிக்குறைவுநிறைவின்றிநிற்கு மசை

இன்றமாயைமுதற் சரீரமீருய், நசையுடையநிறைவுருறை வடைதலாலே நலமானசரீராதிகாலத்துட்பட், டசைதலினுல்வருத்தங்களுயர்வுதாழ்வா மதற்களவையில்லையென்றே யருளினுல். (சுஉ)

பிரபஞ்சத்தில் விவேகத்தாற் குணத்தைப்
பொருளாய்ப்பாராமற் குற்றமேகாணவேண்டுமெனல்.

இல்லாதபிரபஞ்சவிடயந்தானு மீனமதாமவிவேகத்தாலின்பம்போற், கொல்லாமற்கொல்லவரும்விவேகியானேன் குணந்தன்னைப்பாராதுகுற்றங்காண்ட, னல்லநதுவாதலினுற்பிரபஞ்சத்தி னலமானவிவேகத்தாற்குணங்கொள்ளாமற், பொல்லாதகுற்றமதேகாண்பாயென்று புலவர்புகழ்முத்துராமேசன் சொன்னுன். (சுங)

ஒன்றிலேதோன்றி யனைத்துருவமானவுணர்வுக்குப்
பகையுறவில்லையெனல்.

சொன்னவொருசிவமன்றிவேருயொன்று சொல்கின்ருனதன்மனென்றுஞ்சமானமில்லா, வன்னவனேயீசனையுமிகழ்ந்தானென்று மனேகவிதபவமுடையபசுவாமென்று, முன்னவொருப்பெரியோர்களுரைப்பதாலே யொன்றிலேதோன்றியனைத்துருவமான, சொன்னவறிவினிற்பகைகளுறவுகூடா சொன்னவிதுசத்தியமென்றறைந்தான்றூயோன். (சுச)

சித்துரூபனென்கின்ற புத்திமறந்தால்
விட்சேபமும் விபரீதமும்வருமெனல்.

அறைகின்றவகர்த்தனுயகாமனுகி யகாரணனுயகேயனுயமலனுகி, நிறைகின்றவச்சரனுயனுவேயாகி நிற்கின்றசித்ருருவனானேனென்றல், குறைவாகில்விபரீதம்வருவதாலே குலவுநா

ன்சித்துருவனென்றபுத்தி, மறைவாகில்விட்சேபம்விபரீதங்க
ள் வருமுடனேயெனவையன்வகுத்தானன்றே. (சுரு)

சுவரிடத்திற் சித்திரம் வஸ்துவாகாதுபோற்
றன்னிடத்தில்வந்தசங்கற்பம் வஸ்துவாகாதெனல்.

வகுக்கவொணுவம்மனசாய்கின்றதன்னில் வருகின்றசங்க
ற்பமுன்பின்னின்றிப், பகுக்குமிடத்தோருருவ மின்றித்தா
னே பழையோனுயிருக்கின்றபான்மையாலே, வகுப்புடைய
சுவரதனில்வந்தசித்ரம் வஸ்துவதுவாகாத மார்க்கம்போலத்,
தொகுக்கவொணுத்தனில்வந்த சங்கற்பங்கள் சொல்கின்றவ
ஸ்துவதேயாகாதென்ருர். (சுசா)

தன்னைப் பஞ்சகிருத்தியமுடையவனுகக்கண்டாற்
சனனமரணந் தனக்கில்லையெனல்.

வத்தானவுலகமுதலுயிர்களியாவும் வான்போன்றதன்னறி
வேயாவதாலே, கத்தாவாம்பிரமாதிதன்னைவிட்டுக் காணுதா
லொருதொழிலுந்தனக்குவேருு, யெத்துணையுமிலைச்சனனமா
தியில்லை யிதனுலேதன்னைப்பஞ்சகிருத்தியங்க, ளொந்ததன்னையு
டையவனுய்க்காணிற்றன்னை யுருதுபிறப்பிறப்பெனவேசொ
ல்லிறுைல். (சுஎ)

துரியநிலையினு மெல்லாஞ் சின்மயமென்றநிலையினும்
புத்தியழுத்தம்வேண்டுமெனல்.

சொல்லரியதுரியமதிற்சகலதுன்புந் தொலைந்துபரமானந்த
ந்தோன்றலாலு, மெல்லாமுஞ்சின்மயமென் றெண்ணுகின்ற
விந்நிலையேசங்கரார்க்குமிருப்பதாலும், புல்லரியதுரியநிலைதனி
லுமெல்லாம் பொருவிலாச்சின்மயமென்றெண்ணப்பட்ட, ந
ல்லநிலையினும்புத்தியழுத்தம்வேண்டு நலமிதுவேயெனவைய
னுரைத்தானன்றே. (சுஅ)

எல்லாங்கூத்தாகக்கண்டாற்றானே
நித்தியமாமெனல்.

உரையுள்ளனுக்கனுச்சுழுத்திதன்னி லொவ்வாதவிந்தியங் கண்மனுதிமேலும், புரையுள்ளசூனியமாங்கூத்துவந்து போகவுமேதானிருந்தங் கறிவதாலே, நிரையுள்ளகூத்தாடிதனக் கொப்பாக நிருமிக்கக்கூத்துநிலையில்லாதேபோல், வரையுள்ளவெல்லாங்கூத்தாகக்கண்டால் வரைதலொனுத்தானித்யமாகுமென்றார். (௬௯)

பிரமன்முதற்றம்பமீறாய்நிலையில்லாது
தான்மாத்திரமிருப்பதனுலு மத்துவிதமாமெனல்.

நித்தியந்தானெதுவென்று நன்றாய்ப்பார்க்கி னிலையானசிருட்டிமுதலிந்நாண்மட்டுஞ், சத்தியமாயொன்றுமிலேத்தானே சத்தாய்ச் சார்வதினுலத்துவிதமாவதாலும், பத்தியுடைப்பிரமன்முதற்றம்பமீறாய்ப் பார்க்கிலொன்றுநிலைமையிலாப்பண்பினுலுஞ், சித்தியதாந்தான்மாத்ரமிருக்கையாலுஞ் சிறப்பானவிதுவுமத்துவிதந்தானென்றார். (௭௦)

சகத்தெல்லாந்தானேயாகித் தனக்குவேறாய்ச்
சகமில்லாதாலு மத்துவிதமாமெனல்.

நானெனசித்தென்னுந் தத்துவந்தான் சலனமதாமனமாகித் தானேபின்னு, மானுதவிநோதத்தாலனேகமான வசராசரப்பிரபஞ்சமாகிப்பின்னு, நானுவைநீங்கிமிகத்தூரியம்பெற்று நாடரியவஸ்தொன்றேயிருப்பதாலே, தானுகிச்சகத்தெல்லாந்தனக்குவேறாய்ச் சகத்தில்லாதாலுமத்துவிதந்தானென்றார். ()

இக்கவியேவாக்கியம்.

என்றுமேசரீரமெடுந் தாத்மானுத்ம வியலானவிசாரமதுவனுவதன்முன், னன்றாகவெகுவிதமாயுயர்ந்தோமென்று நவி

ன்றவரிலொருவருமேயில்லாதாலே, பொன்றுவதாந்தேகாதி வஸ்துதன்னிற் பொருளாகவென்னதிரநிலையாமென்று, குன் ருதகோவிலூரதனின்மேலாங் குணக்குன்ருயெழுந்தகுருச் சொல்வதானுன். (எஉ)

இக்கவியேவாக்கியம்.

சொல்கின்றபிரபஞ்சந் திரிகாலத்துஞ் சுத்தமதாயில்லாதபடியினுலும், புல்கின்றவொருநினைவுவருகாலத்துப் பொருந்துமோர்நினைவுதானழிதலாலும், பல்விதமாய்க்காண்கின்றபொருள்களெல்லாம் பற்றறவே துடைபட்டுப்போவதாலு,மெல்லாமுமித்தையதாமென்றுமென்றே யியம்புவதிற்சந்தேகமில்லையென்ருர். (எங)

திருநதித்துறைகளெல்லாந்தீம்புனல்வறந்த வேயோவெனல்.

சந்தேகமில்லாதுதன்னைக்காணிற் றனக்காகவொருபொருளும்வேண்டாதாலு, மந்தமிலாவானந்தவஸ்துத்தானே யாவதனுற்றனக்கொன்றிற்பிரியந்தோன்ரு, வுந்துகின்றசரீரமதுசுருகேயாதி யுண்கினுமேகருமம்வரையிருப்பதாலுஞ், சிந்திக்கிற்றிருநதியின்றுறைகளெல்லாந் தீம்புனல்கள்வறந்ததுவோவெனவுரைந்தார். (எச)

இக்கவியேவாக்கியம்.

உரமானவக்கினியிலுண்டாகித்தா னுறுகின்றபொறிக்கனலேகாரணம்போற், பரமானவாத்மாவிலுண்டாகின்ற பரசிவசகங்களுக்காத்மாவேயன்றித், திரமாகவேறென்றுமூலமாகச் செப்பவொணுதென்றுமதுநதிசூழ்ந்த, வரமானகழனிகருதயஞ்செய்த மகிமையுளமுத்துராமேசன்சொன்ஞன். (எரு)

## இக்கவியேவாக்கியம்.

சொன்னவொருபழுதையினின்வந்தசற்பஞ் சுத்தமதாம்பழுதையெனச்சொல்வதேபோற், பின்னமிலாப்பிரமத்திற்றோன்றுநின்ற பிரபஞ்சம்பிரமமதேயாகுமென்றிங், கின்னவணநித்தசுத்தபுத்தமாக விருக்கின்றசிதானந்தப்பிரமந்தானே, மன்னுகின்றநாமமுடனுருவமாக மானிடனுய்வந்தெனக்குவகுத்ததன்றே. (எசு)

## கருமகர்த்தாவாய்க்காணும்போது கருத்ததந்திரம் நித்தியமாய்ப்பூரணமாய்க்காணும்போது வஸ்துதந்திரமாமெனல்.

வகுப்பானதிரிகரணஞ்சேர்ந்துகர்மம் வருவதனுற்கர்த்தாவாய்க்காட்டுந்தன்னைப், பகுப்பிலாநித்தபரிபூன்றமாகப் பார்க்கும்போதொருகாணங்கர்த்தாவின்றித், தகிப்பிலாதகர்த்தாவாய்க்காட்டலாலே தான்கருமகருத்தாவாய்க்காணும்போது, பகுப்பானகர்த்ததந்திரமாநித்த பரஞானம்வஸ்துதந்திரமாமென்றூர். (எஎ)

## இக்கவியேவாக்கியம்.

என்றுமேகாரணகாரியமாயுள்ளதியாதுக்கும்பரிச்சினமுங்கண்டமுண்டா,மொன்றவிலாவகாரணமாமாத்மாவுக்கோ வொப்பிலபரிச்சினமுமகண்டந்தானுங், குன்றுதிங்குண்டெனவேயுடுக்கள்சூழ்ந்த குறைவிலாச்சந்திரனுக்கொப்பதாக, நன்றுறவேகழனியின்கண்ணடியாரோடு நாயேனையாட்கொண்டநாதன்சொன்றுன். (எஅ)

## இக்கவியேவாக்கியம்.

காதலுலருள்செய்தசாத்திரங்க ணலமாகச்சகலமுமேவிசாரஞ்செய்து, சாதகராஞானிகட்குமௌனதியானஞ் சமுசாரமு

லானபோகந்தன்னி, லேதமுறுமாசையதாம்பாசத்தாலே யிய ல்பானபிரவிருத்திபிரபஞ்சத்தி, லாதரவாம்பிரமாணபுத்தியா லே யனுதினமும்வருமெனவேயருள்செய்தாரே. (எகூ)

அனேகசெல்வம்பெற்றோர்க் குதாரமுமிரக்கமு மில்லாதிருத்த லவிவேகத்தினாலேதானெனல்.

அருளுடையபெரியோர்க்குச்செல்வம்வந்தா லழகானநகர் நடுவிற்றடாகம்போல, மருளறவேயுதாரமுடனிரக்கந்தோன் று மயக்கமுடையோரிடத்தினிதிகள்சேர்ந்தாற், றிருவானந கர்நடுவிலெட்டிபோலச் சிறப்படையா தாதலினாற்செல்வம்பெ ற்றோர்க், கருளானவுதாரமுடனிரக்கந்தோன்றா தவிவேகத் தாலாகுமறிவாயென்றார். (அ0)

இக்கவியேவாக்கியம்.

அறிவானதெய்வவிதிரித்தமான வனித்தியமாஞ்சீவேசசகங் கடன்னின், வெறியானோர்கட்டாகப்பேசாநின்ற வீணானவச னங்கள்புத்திமானுக், கறிவதனைச்சுவசனங்களாக வறிகவெ னக்கயிலைவரையதனினின்று, குறியானகழனிநகருதயஞ்செ ய்த குருநாதனருளியென்னுட்குடியாய்க்கொண்டான். (அக)

வாக்கியத்தி னளவுகூறுகின்றது.

கொண்டாடுமடியார்கடன்னைச்சூழக் குறைவில்சிவங்குரு வடிவாயருளினாலே, வண்டுமதுவுண்டிசைகள்பாடாநின்ற வ ளமானகழனியின்கண்புலவர்போற்றக், கண்டடியேன்வண ங்கவந்தமுத்துராமக் கனிதிருவாக்கருளியிடும்வாக்கியத்து, ஞா ண்டானவெண்பதொன்றும் வாக்கியத்தை யுரைசெய்தேனு ன்மையறிவுதிக்கவென்றே. (அஉ)

## குரு தோத்திரம்.

உண்மையறியாதுகருக்குழியில்வீழ்ந்திங் குழலாதுமூடருற வதனைத்தள்ளி, யெண்மையதாம்பொய்ப்பொருளைவேண்டா தாகி யெப்போதுநின்பணியேவேண்டுமெற்குத், திண்மைய தாம்பரவடிவுதோன்றிவேருஞ் சிற்றறிவுசுகதுக்கந்தோன்று தான, தண்மையதாந்துரியநிலைதருவாய்ஞான சற்குருவாய்க் கழனியின்கணெழுந்தமூர்த்தீ. (அ௩)

மூர்த்தமிலாநித்தியமாயமூலமாகி மூக்குணமூங்கடந்தபராது ரியமாகித், தீர்த்தனுமாய்த்திருக்குருவாய்ச் சிவமதாகிச் சின் மாத்ரவடிவாகிச்செயக்கூடாதா, யார்த்தலிலாவணுவுருவாய ஞதியாகி யபேதனுமாயலோபனுமாயமிர்தனுகிப், பார்த்தலி லாப்பரிபூன்றவடிவமான பரகுருவேயடியனையாள்பரமாபோ ற்றி. (அ௪)

பரமாணவன்புடையதேவர்வாழும் பைம்பொன்னாட்டினுமி னிதாஞ்சித்திசூழ்ந்த, வரமானகழனிநகருதயஞ்செய்து வழி துறைகளறியாதவென்றனக்கிங், குரமானவணிகனலச்சித்தே நீயென் ருெப்பிலாவாக்கதனுலருளிச்செய்த, சிரமானமுத்து ராமேந்திரனை திவாகரனைத்தினந்தோறுந்துதித்துவாழ்வாம்.

துதிக்கவொண்ணுநாரியர்கண்வலையுட்பட்டுச் சொல்லரியவிழி வானதொழில்கள்செய்து, மதிக்கரியசெல்வமிகத்தேடிப்பித் தர் மதிபோலமயங்கிமிகத்திரிந்தவென்னைத், திதிக்கருமநிக ழ்கழனிதன்னின்மேவிச் சித்தமதுவொத்தடியாரோடும்பார்த் து, விதிக்கரியநீபிரமமென்றுசொன்ன மெய்வடிவாயெழுந்த பரம்பொருளேபோற்றி. (அ௬)

பொருளானவவத்தையைந்துமொன்றிலொன்று பொருளா காதழிவதனுலதனிலுண்டாய், வருநியமங்காலதேசங்களாகி மருவுகின்றசகத்தெல்லாம்பொய்யேயாகும், பெருகுவதாமவத்

தையைந்துமறிந்துநின்ற பிரமமதாந்துரியாத்மாவொன்றேநி ன்ற, தருமையதாமதுவேநீயென்றுரைத்திங் கடியேனையாண் டவன்றன்னருளேபோற்றி. (அஎ)

அருள்பரையாய்ச்சிவமயமாமையனேயா ணகமதனிற்... கொண்டகருவநீங்கித், தெருளானவுனதுதிருவடியிலென்று... திரிபுடிகளொழிந்துதிரமாகநிற்க, வருவதுவாமொருநாளுமு ண்டோசொல்லாய் மாசிலாக்கழனிநகருதயஞ்செய்து, திருவு டையதுறவறத்தோரில்லோர்போற்றத் திகழ்சிந்தாமணியான குருவேபோற்றி. (அஅ)

குருமுதலேசத்தியசிற்சொரூபக்குன்றே குணமாகவடுத்தவ ர்கள்பவத்தைநீக்க, வருநிதியேகல்லாலினமர்ந்ததேவே வல் வினையேனென்னுடையமயக்கநீங்கிப், பொருவரியசாந்திமுத ற்குணங்கள்பெற்றுப் பூரணமாந்திட்டிதனையடையச்செய்வா ய், திருவளருங்கழனிநகரதனின்மேவுஞ் சிதாகாசசொரூபம தாய்ச்சிறந்தமூர்த்தி. (அகூ)

சிறப்பானவாய்ப்பாடிதன்னின்முன்னாட் செயவரியலீலைத னைச்செய்தப்பாலு, முறைப்பானபார்த்தன்முதலனேகம்பேர் க்கங் குயர்வானஞானமதையளித்துப்பின்னு, மிறப்பிலாக்கழ னிநகரதனின்மேவி யெண்ணரியலீலைதனையியற்றியன்பர், ம றைப்பதனைநீக்கியுயர்ஞானந்தந்த மாசில்குருவடிவானமணி யேபோற்றி. (கூ0)

மணியானபொறுமையினிற்றருமர்போலு மலர்வானகொ டையதனிற்றதீசிபோலுந், துணிவானவாக்கரிச்சந் திரனே போலுஞ் சுகமானலீலைதனிற்கிருஷ்ணன்போலுந், தினியா னஞானமதிற்சனகன்போலுஞ் சிவபணியிற்றிருநாவுக்கரசே போலு, மணியானபோதனையில்வசிட்டர்போலு மடுத்தமூர்த்து ராமர்திருவருளேபோற்றி. (கூக)

அருள்வடிவேயச்சுதனேயமலாபோற்றி யடுத்தவரைச்சிவமாக்குமன்பேபோற்றி, பொருண்முழுதுங்கடந்தபரம்பொருளேபோற்றி போதவடிவாயெழுந்தபுனிதாபோற்றி, தெருளிலாநாயினுமேகடையனை சிறியனையுமாட்கொண்ட சிவமேபோற்றி, குருவானபெரியோர்கடன்னின்மேலாங் குருமணியாயெழுந்தகுணக்குன்றேபோற்றி. (௯௨)

குன்றாதுநானவனீதெதுவுமாகிக்குலவுமதற்ககண்டமதாய்நின்றாய்போற்றி, நன்றாகச்சகத்துக்குநிமித்தமாயு நலமானவுபாதானமானாய்போற்றி, பொன்றாதவடியருளத்தறிவாய்மூடர் புந்தியினிலிருந்துமவர்க்கறியாய்போற்றி, யென்றுமேசேடமதாய்த்திருக்காய்நின்ற விணையிலாக்குருவானசிவமேபோற்றி.

சிவரூபமானசுப்ரமணியன்றானுந் திவாகரனோர்நயினாத்தணடியுமென்று, மவமகற்றுமழகையன்கழலுநீங்கா வருள்வீரபத்திரனங்கிரியுங்கிழாம், பவமகற்றுமுத்தய்யமுதல்வன்பாத பங்கயமுமுகந்தேசன்பதங்கடானு, நவமாகவெனையாளுமுத்துராம நாதனிருசரணமதுநயந்துவாழ்வாம். (௯௪)

நயந்தடியேனெப்போதும்பிரமநிட்டை நாடியேயானந்தமடையவெண்ணி, முயன்றதனாற்காமமுடன்கோபலோப மோகாதிதனைநீக்கிப்பிரமந்தன்னின்; மயங்குருவந்தோன்றாதுசித்திரம்போன் மனதலைவற்றிருக்கவருள்புரிவாய்ஞான, சயம்புருவாய்வந்தெனையுமடிமைகொண்ட சற்குருவாயெழுந்தருளுஞ்சம்புமூர்த்தி. (௯௫)

சம்புவாய்ச்சாந்தமதாய்ச்சலியாதாகிச் சகசீவபரங்களெலாந்தானாய்நின்ற,நம்பனேநின்சொருபமனவாக்காலேநாடினாலெட்டுவதாயிலாததாலே, வம்பானசகமதனின்மனந்தான்மூழ்கி மயங்குகின்றதனையகற்றவழியைக்காணேன், செம்பதுமத்தாளுடையவையாநாயேன் சிவமாகவருள்புரிவதுனக்கேபாரம்.

பாரமதாமிருவினைதானொப்புவந்து பற்றுகின்றமலநீங்கிச்சுத்தனுகிச், சாரமதாஞ்சாதனங்களொன்கும்வந்து சாந்தியுடையோரொருவர்க்கருமையாக, நேர்மையதாய்ப்போதிக்கும்விதியைநீக்கி நீங்காதவருள்வடிவாயெழுந்ததாலே, சீர்மையதாஞ் சாதனங்களொன்றுமில்லாச் சிறியேற்கு மருள்செய்தசிவமே போற்றி. (கூஎ)

இந்நூலின்பலனுரைத்தல்.

சிவவடிவாயெழுந்தமுத்துராமலிங்க தேசிகனுலருள்செய்தவாக்கியத்தைப், பவமகலக்கவிசெய்துகோர்வையான பரஞானவந்தாதிதன்னையன்பாய், நவமதனிற்படிப்போர்கள்கேட்போர்தாமு நவமாகவதினர்த்தம்பார்ப்போர்தாமு, மலமாணபவநீங்கிச்சித்தசாந்த மானந்தம்பெற்றுமேலரூபமாவார். ()

வாழியுரைத்தல்.

அருளுருவாயெழுந்தபரிபூன்றமான வையர்முத்துராமர்திருவடிகள்வாழி, தெருளுமவரடியவனுலுதவப்பட்ட திகழ்ஞானவந்தாதிவாழியத்தை, யுரிமையுடனெப்பொழுதும் படிப்போர்கேட்போ ரோர்ந்தவையினருத்தமதைப் பார்ப்போர்வாழி, திருவளருங்கோவிலூரடியர்யாருஞ் சிறப்பாகவெப்பொழுதும்வாழிவாழி. (கூகூ)

இதுவுமது.

வாழியெனவோதியிடுமடியார்மேவு மாகர்நாடெனவிளங்குங்கண்டநல்லூர், சூழுமடியார்களறியாமைதன்னைத் தொலைத்துமேசகலபரிவாரத்தோடுந், தாழ்விலவர்தரிசிக்கவரங்களீந்து தன்னிகரிறிருக்குளத்தின்கரையினுற்றே, யூழியினுநீங்காதுநித்தமாகி யுற்றசுந்தரேசர்பதம்வாழிமெய்யே. (க00)

ஞானவந்தாதி முற்றிற்று.

---

முத்துராமலிங்கதேசிகர் திருவடிவாழ்க.

சிவமயம்.

# ஏதுசொரூபங்காரியம்.

---

## செல்வவிநாயகர் துதி.

உலகதின்விளங்காநின்ற வுயிர்கள்யாவருக்குமேலாம்
பலனதுகொடுக்குந்தேவர் பங்கயன்மாலரற்கு
நிலவியவிக்கினத்தை நீக்கியேகிருபைசெய்து
விலகலிலோங்குஞ்செல்வ விக்கினேசுரனேபோற்றி. (க)

## குருவணக்கம்.

அவனிவருனேயென்றிங் கறியாமைவடிவாய்நின்ற
தவமிலாவெனக்குவேதஞ் சாற்றியபொருளீதென்று
பவமறத்தானேதாளும் பரசொரூபானுபோக
நவமதாயருளுமுத்து ராமலிங்கேசாபோற்றி. (உ)

## நூல்.

மைந்தனேநித்தாநித்த வஸ்துவாம்விவேகத்திற்குச்
சுந்தரவேதுசித்த சுத்தியாஞ்சொரூபங்கேளாய்
சந்தமார்பிரமமாத்ரஞ் சத்தியநியமமாகச்
சிந்தைசெய்சிவனீசன் செகமெலாமநித்தமென்றும். (ஈ)

என்றுமேசாத்திரந்தா விறுதிசெய்வதுவேகார்ய
நன்றுறவதையெப்போது நாநாவாய்ச்சிந்தைசெய்த
லொன்றுறுமவதிபிர்ம மொன்றுமேயுண்மைமற்றப்
பொன்றிடுசிவனீசன் பொருசகமநித்தமாயும். (ச)

ஆகுநிச்சயமொன்றாலு மகலாதுதிடமாய்நிற்றல்
பாகமாமிகமுத்ரார்த்த பரபோகவிராகத்திற்கிங்
கூகமாமேதுவிந்த வுலோகத்திற்பரலோகத்தி
லாகியபெண்களாதி விடயங்களநித்தமோடும். (ரு)

துக்கமாதிகளாந்தன்மை விசாரத்தால்வெறுப்புத்தோன்றன்
மிக்கதோர்சொருபமந்த விடயங்கண்ஞானிதின்று
கக்கியவசனம்போலுங் காலாக்கினிநரகம்போலுஞ்
சக்கையாய்க்கண்டுநீக்கல் சாருங்காரியந்தான்முன்னே. (சு)

விட்டதோர்விடயந்தன்னில் விருப்பமோர்பொழுதுமாறி
யிட்டமாய்வராதிருந்த விலங்கியவவதிதேகந்
தொட்டுமேபிரமலோக வரையிலுந்தொடர்போகத்திற்
றிட்டமாயாசையின்றித் திரணம்போலுபேட்சைசெய்தல்.(எ)

செய்திடுஞ்சமாதிசட்க சம்பத்துக்கேதுசெப்பிற்
றுய்யதோரியமமாதி சொரூபந்தான்விடயந்தன்னின்
மைபிரவிருத்தியற்று மனமதிங்கடங்கிநிற்றன்
மெய்யுறுகாரியந்தான் விவகாரச்சயமதாகும். (அ)

ஆகியவவதிகேளா யறவுமேசுழுத்திபோலத்
தேகமும்விடயமியாவுந் திரமாகமறந்திருந்த
லேகமாமோட்சாபேட்சைக் கேதுதான்சாதுசங்கந்
தாகமாஞ்சொரூபந்தானுந் தலைரோமந்தனினெருப்பே. (கூ)

பற்றிக்கொண்டவனைப்போலப் பகர்பின்னையொன்றிலேயு
முற்றுமேயாசைநீங்கி மோட்சவாசையதேதோன்றல்
குற்றமில்காரியஞ்சற் குருவையேதேடிக்கிட்டல்
கற்றிடுமவதியெல்லாக் கருமமுந்தியாகம்பண்ணல். (கo)

தண்ணியவிந்நான்கு சாதனப்பலனேதென்று
மெண்ணியநான்கும்வெவ்வே றிருந்திடிற்சொற்கலாபந்

இன்னியநான்குமொன்றாய்ச் சேர்ந்திடிலிங்கேதானே
பண்ணிமோத்மாநுத்ம விசாரமேபலமாமைந்தா. (கக)

மைந்தனேபந்தவேது மயக்கமாங்கன்மசாத்ரஞ்
சொந்தமாயற்பசித்தல் சொருபமுந்திரிசயத்தில்
வந்தசிந்தனையாங்காரியம் வருதிரிசயத்தின்மேன்மே
லந்தமில்சத்யமாக வழுந்துசிந்தனையாஞ்சொல்லின். (கஉ)

சொல்லியவவதியென்றுஞ் சூழ்திரிசயங்களெல்லா
மில்லையென்றத்தியந்த மிலங்கியவபாவஞான
மெல்லையாம்பலனேதென்று லெழுசமுசாரதுன்ப
நல்லதோர்மோட்சவேது ஞானநூலற்பசித்தல். (கஙூ)

அற்பமில்சொருபந்தானு மறிதிரிசயசங்கற்பம்
பொற்புறவிலாதிருத்தல் பொருவுகாரியமேதென்றாற்
சொற்பசிந்தனைகள்கூடத் தோன்றாமைதிரிசயத்தில்
விற்பனவவதிசின்மாத் திரமதாய்விளங்காநிற்றல். (கச)

நிற்றலிற்பலனேதென்று னிகழ்பிரமானந்தந்தான்
செற்றமின்ஞானவேது சிரவணமனனந்தியானம்
பற்றியசொருபஞ்சுபானு பவத்திறைற்றேகமாதி
யற்றமாம்பிரபஞ்சங்க ளநித்தியமென்றுந்தானே. (கரு)

தானுனவகண்டபூர்ண சச்சிதானந்தவஸ்து
வானதுசத்யமென்றே யறவேறுபட்டிருந்த
லூனமில்காரியந்தா னுலர்தேகமுதற்சகத்தி
லீனமாஞ்சத்யபுத்தி யெவ்வளவும்வாராதான்மா. (கசு)

ஆனதுதானேயென்றிங் கழுந்தியசத்யபுத்தி
தான்வாங்காதிருத்தலாகுந் தயங்கியவவதிகேளா
யூனவஞ்ஞானகாலத் தறுமையம்விபரீதங்க
டானுமங்கிருத்தலின்றிச் சரீரந்தானுதல்போல. (கஎ)

சாலவுஞானகாலர் தன்னிற்றேகோகமென்னுஞ்
சீலமில்புத்திநீக்குஞ் சிவோகமென்றிடமுறைப்புக்
கோலமாம்பலமேதென்றாற் குறைவிலப்பிருதிபந்த
சாலபரோட்சசாட்சாத் காரமாமோட்சமன்றே. (கஅ)

இன்னல்சேரஞ்ஞானத்துக் கேதுவுநிரோதுவாகு
முன்னியவதன்சொரூப மொன்பதுவிதத்தினாலும்
பன்னிடினிருபவிக்கப் படாமையேகாரியந்தான்
றுன்னியசீவனீசன் றொடர்சகமாகச்சார்தல். (கக)

சாருறுமவதிஞானோ தயம்பலநிட்பலந்தா
னேரிலாச்சந்தேகத்துக் கேதுவும்விசாரமின்மை
யார்சொரூபந்தான்கர்த்தா வாகுமோசாட்சியாமோ [றே.()
வோர்சாட்சி யெனினுங்கர்த்தா போர்த்தாதி யுண்டோவின்

இன்றாயிற்கர்த்தத்வாதி யிவருக்குப்பூரணத்வ
நன்றாகவுண்டோவின்றே னவிலவையுண்டானாலுங்
குன்றலிலவனைக்கானைக் கூடுமோகூடாதோதா
னென்றவரறிந்தான்மோட்ச முண்டாமோவுண்டாகாதோ.()

உண்டாகுமித்தொந்தாதி யுறுஞ்சித்தவிருத்தியாகுந்
தண்டலிற்காரியம்முன் சாற்றியசித்தவிர்த்தி
பண்டுபோன்மீளமீளப் பலவிதமாயுண்டாதல்
விண்டதோரவதிதிர்க்க காலத்தின்விசாரமாமே. (உஉ)

ஆம்பலனிகபரத்தி னடைந்திடும்போகமற்றுந்
தோமுறுதுன்பஞ்சேர்தல் சொல்விபரீதத்தேது
தாந்தனையறியாதாகுந் தகுசொருபமுந்தான்றேக
நாமெனச்சகஞ்சத்தாக நண்ணியவிருத்தியாகும். (உங)

தானுமேபிராமணனாதி வருணங்களென்றுந்தானே
யானதோர்பிரமசாரி யாதியாச்சிரமமென்று

மோனையாங்காத்தியாயர் முதலானகுலங்களென்று
நானுமேகிருஷியாதி நலமானதொழிலோனென்றும். (உச)

என்றுமிதாதியாக வெழுவிர்த்திகாரியந்தா
னன்றதாமவதிநாம ரூபத்திற்செல்வதில்லா
தொன்றுனதாறுமாத்மத் தியானமாம்பலமுமோதிற்
றுன்றிடுஞ்சனனமாதி சமுசாரதுக்கநாளும். (உரு)

வேறு.

நாளுஞ்சவணவேது நான்குசாதனமுண்டாய்க்
கேளார்தீவிரமாகக் கிளருமோட்சாபேட்சை
மாளில்சொருபஞ்சொல்லின் மகத்தாம்பரமான்மாவை
யாளுஞ்சுருதிசாற்று மாறிலிங்கத்தாலும். (உசு)

மாறில்சவணஞ்செய்து மற்றைநூல்கள்படியா
தேறுநாமுண்டென்று தெளிவதான்மாவிலையென்
றூறஞ்ஞானமிறந்த லோவுகாரியமவதி
மாறஞ்ஞானந்திரும்பா வளாக்குஞ்சவணஞ்செய்தல். (உஎ)

செய்யிற்பலமேதென்றாற் றிடவபரோட்சஞான
முய்யுமனனத்தேது வொப்பாவவதிவளாக்கு
மையில்சவணம்பண்ணி மருவியவஸ்துவிவேகம்
பொய்யில்சொருபஞ்சூக்ம புத்தியேகாக்கிரத்தே. (உஅ)

கிரமவைங்கோசத்திற் கிளருமான்மவஸ்தைப்
பரமாயோர்ந்துதன்னைப் பாங்காயறிதல்காரியங்
கரியான்மாவுமிருந்தாற் காணோரோவிலையென்னு
நராபாணுவரண நட்டமவதிநவிற்றில். (உகூ)

இறவாமபாணுவரண மெழூந்துவாராவளாக்குந்
திறமாய்விசாரம்பண்ண றெளிவாம்பலனேதென்னி

னிறையும்பரஞானமதா நித்தியாசனவேது
வுறவாஞ்சாதனநான்கோ டொத்தேயவதிவரைக்கும். (௩0)

அவமதறவேசெய்யு மழகாஞ்சவணமனனம்
பவமாஞ்சொருபமகண்ட பரிபூரணசத்சித்தா
நவமானந்தப்பிரம நானுனானேயந்தத்
தவருவகண்டபூர்ண சற்சிற்சுகமதான. (௩க)

பிரமமெனவிச்சின்ன பேதமிறயிலதாளை
யுருவெஞ்சுசாதிவிருத்தி யோடேசந்தத்தியானந்
திரமாய்ப்பண்ணல்காரியந் தெளிவோடுள்ளும்வெளியு
மொருசத்தாதிவிடய மொழிந்தேதியானம்பண்ணல். (௩உ)

பன்னுமவதிதியானந் தியானிப்பவனுமிழந்தே
மன்னுஞ்சுத்தசத்வ மனதும்பாலிற்சலம்போற்
றுன்னுமகண்டபூர்ண சொருபத்தேகரசமாம்
பன்னும்பலமப்பிருதி பந்தமானஞானம். (௩௩)

வேறு.

ஞானமில்காமவேது நவிற்றிடிலஞ்ஞானந்தா
னுனமில்சொருபனெய்தா னுற்றிடுங்கனல்போனம்ம
தானபோகங்களெல்லா மமோகமாயாகவேண்டு
மானவைசுரியமெல்லா மாருமலிருக்கவேண்டும். (௩௪)

வேண்டிடும்பெண்களாதி விடயங்கண்மேலுமேலும்
பூண்டிடவென்றுநாநா விதமாகப்புந்திபண்ண
நீண்டகாரியமுமவ்வவ் விடயத்திற்றிகழுமன்பை
யீண்டுமோநாநாவாகச் சிந்தித்துத்தானிருந்தே. (௩௫)

இருந்திடுமிடத்தைவிட்டிங் குலோகாலோகங்களெய்தி
யருந்திடநரகாகுர ஞுதியானோர்கள்போல

வருந்தியேயிட்டமான வஸ்துகள்சம்பாதித்த
னெருங்கிடுமவதியத்தி யந்தமாநிராசைதோன்றல். (௩௬)

தூண்டிடுங்குரோதவேது தொகுமாசைசொருபமாசை
பூண்டிடும்விடயந்தீமை பொருத்திஞேனிடத்திற்கோப
மூண்டிடப்புலிபோனேக்கி முனிவொடுவசனஞ்சொல்லல்
வேண்டில்காரியந்தன்னுலே மேவவன்செயிக்கக்கூடில். ()

அப்போதுபாகாசூர னுதியானேர்கள்போலச்
செப்பிடுமடியேயாதி காரியஞ்செய்தறன்னுல்
வெப்பமாய்வெல்லக்கூடா விடிலுள்ளேயிருந்துநோதல்
பொற்புறுமவதிசாந்தஞ் செறிபொறையுதயமாதல். (௩அ)

ஆதலாம்லோபத்தேது மோகமாஞ்சொருபமாத
றீதுறுகவரிமானுந் தேனீயும்போலவேதான்
சாதமாய்ச்சம்பாதித்த சம்பத்தாதிகளிலார்க்கு
மீதலொன்ருவதேனு மிலையென்றுசிந்தைசெய்தல். (௩௯)

செய்யில்காரியந்தான்சம்பா தித்திடும்பதார்த்தத்தொன்றுந்
துய்யவூர்நடுவினச்சு மரம்போலுஞ்சுயோதனுதி
கையர்போலொருத்தர்க்கொன்று முதவாமல்வைத்துக்காத்த
லையமிலவதியத்தி யந்தமாமுதாரமாகும். (௪0)

ஆகியவிந்தமூன்ரு லாம்பலமிகபாத்தி
னுகிகனிந்தையுற்று மூளதேகமுதலாம்வஸ்துப்
போகியநாளிற்றுன்பம் போனபின்பிறப்பிறப்போ
டாகியசமுசாரத்தி லழுந்தியேயலைவன்மைந்தா. (௪௧)

மைந்தனேநிராசைக்கேது வருமாசையின்றிச்செய்யும்
பந்தசற்கருமபுண்ய பரிபாகஞ்சொருபங்கேளாய்

விந்தையாம்பெண்களாதி விடயத்தின்குணதோடங்கள்
புந்தியால்விசாரித்தாசை போக்கிடலாகுமன்றே. (௬௨)

காரியங்காதல்விட்ட பொருள்களிற்றதிசிபோலப்
பாரிகள்சரீரமாதி பதார்த்தமுங்கேட்போர்க்கீத
லாரியலவதியத்தி யந்தமாங்காமநாச
நேரியல்பொறுமைக்கேது நிராசையாஞ்சொரூபங்கேளாய்.()

தன்வேலைக்காரனாதி யோர்களுந்தடித்தலாதி
யென்னகாரியஞ்செய்தாலு மிதுவினைவழியென்றோர்ந்து
தன்னுளேபொருத்தல்கார்யந் தனக்கபகாரஞ்செய்ய
வுன்னியபேர்க்குப்பூமி யுதிட்டிரராதியானோர். (௬௪)

போலுபகாரம்பண்ண லவதிதான்புகல்குரோதஞ்
சாலவேநாசமாத றங்கியவுதாரத்தேது
பாலியல்குணகுணங்கள் பகுத்தறிவிவேகமாகுஞ்
சீலமாஞ்சொருபமூரின் றெருநடுநிறைதடாகம். (௬௫)

தடமதாய்ப்பழுத்துநன்றாய் நிழறருமரமும்போல
வுடலுளவுயிர்கள்யார்க்கு முபகாரமாயிருத்த
லிடமானகாரியம்வே ராதியாய்க்கொழுந்தீறாக
வடர்வதாமுயிர்கணோய்க்கு மருந்தாகியுதவிசெய்யும். (௬௬)

செய்யதாம்ரங்கள்போலுஞ் சிவிச்சக்ரவர்த்திபோலு
நைவினுற்கேட்போர்க்கெல்லா நயந்திடுமியாவுமீத
லுய்வதாமவதியத்தி யந்தமாமுலோபநாசம்
பையுடையிம்மூன்றிற்கும் பலமிகபரலோகத்தில். (௬௭)

கீர்த்தியுமிப்போதுக்கங் கெடுதலுஞ்சுகத்தோடுற்று
மூர்த்தமின்ஞானத்திற்குச் சாதனந்தேடிமோட்சம்
பூர்த்தியாயடைவன்ஞானம் பொருந்துமுன்றேகநீங்கி
லூர்த்தலோகத்திலுள்ள வுறுசுகமனுபவிப்பன். (௬௮)

அனுபவமாகத்தன்னை யறிந்திடவேண்டினிப்போ
சொனநித்தாநித்தமாதி யாய்ச்சொலுங்குணங்களுக்கு
வினவிடுமேதுவாதி தன்னையும்விபரமாக
யனகனேயறப்பசிக்கி னறிந்துயர்மோட்சஞ்சார்வன். (௪௯)

சாருறுமடியார்சூழத் தயங்கியகோவிலூரா
மேருளசிவஸ்தலத்தி லெளியனையடிமைகொண்ட
நேரிலாச்சற்சித்தாக நிகழ்பரப்பிரமமான
சீருண்முத்துராம தேசிகேசுரன்றாள்போற்றி. (௫௦)

ஏதுசொரூபங்காரிய முற்றிற்று.

---